உ

# பிற்காலச்
# சோழர் சரித்திரம்

878

பகுதி I


ஆக்கியோர் :

**T. V. சதாசிவ பண்டாரத்தார்,**

அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சித்துறை விரிவுரையாளர்.






அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

1954

உ

# பிற்காலச்

# சோழர் சரித்திரம்



பகுதி I

ஆக்கியோர் :

**T. V. சதாசிவ பண்டாரத்தார்,**

அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சித்துறை
விரிவுரையாளர்.




அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

1954

# INTRODUCTION

PROF. MINAKSHISUNDARANAR, M. A., B. L.,
M. O. L., Dip. EC., M. R. A. S.

1944–46: Those were the years when this book was taking its final shape. I can never forget those happy years of my stay at the Annamalai University as the Professor of Tamil though it was a parenthesis in my life. The Tamil Department in that Tamil University in the present context has to be the meeting point of the past and the present, as well as of the East and the West. It has to look backward to the classical Tamil of the Sangham and the Medieval periods, with all its literary, historical and philosophical implications and forward to the Tamil of the future as the proper and powerful vehicle of all modern knowledge with all its scientific implications. This living contact with all the other Departments of the University has become all the more necessary, thanks to the regional language trying to become the medium of instruction. The History Department was the first to develop this contact; South Indian History occupies even now an important place in the Tamil Honours Course. Therefore there is no wonder in the Tamil Department giving to the world a work on History.

A picture of the Tamil Land and its varied and variegated aspects of life through the ages, has yet to be painted. Tamil Literature is a valuable mine of knowledge for any research student of History, Philosophy or Literature. The Tamil Department has to undertake amongst others inclusive of philosophical research this Historical research. An authoritative history of the Tamil country is what every Tamilian longs for, especially after the dawn of Freedom in our land. Tamil Literature and Tamil Inscriptions so carefully studied in this Department still remain the source of such a history.

The age of the Imperial Colas which gave life to the conception of a Greater Tamil Land of valour and culture, even now inspires the Tamilians with its skyscrapers of Gopurams and its

Aeneid of Kamba Ramayanam. Prof. Nilakanta Sastri's monumental work on the Colas is there. But for one thing it is in English, a language still unknown to many a Tamilian. And for another the Tamil Department which was fortunate enough to have in its midst Tiru. T. V. Sadasiva Pandarattar, a ripe Tamil scholar who has made a life-long study of the Tamil Inscriptions, felt that a few new points of view could be presented even in this study of Cola history. Therefore the present book on the "Later Colas" came to be written by Tiru. Pandarattar in Tamil. It is very unfortunate that the last portion of this work on the culture of the Cola Age has been postponed to a later date. As a Tamil scholar Tiru. Pandarattar is most qualified to write on that subject and I personally know of the importance of his contribution in that field. We may yet hope that he may complete that last volume before he becomes very old.

The learned author has emphasized certain facts in this work and it is my duty to draw pointed attention to them. In those years, I proposed to discuss these facts separately at some great length in English, for getting the benefit of criticism from a wider world of Research. But unfortunately there was time only for preparing one paper on "Palaiyaru," which was read before the Indian Historical Congress at its session at Annamalainagar. In the present book, the importance of Palaiyaru as the capital of the Colas during the VII and VIII centuries and as the second capital of the Colas during the subsequent centuries, is well brought out, along with its present condition. Our author belongs as it were to Palaiyaru and its vicinity and therefore gives important and interesting local informations of historical value about Palaiyaru, about Tiruppurambiyam, its historical relics, its tomb temple on the remains of the Ganga King Pritivipati I who died there on that battle-field along with a Pallava King, its temple built in stone by Aditta, the victor of that battle-field, and about Tirailoki, its historical relics confirming Rajendra I's victorious march into Bengal.

The author has at some length dealt with the inter-relationship of the Cola marital alliances with the Cola foreign policy which reminds us of the old European foreign policies bringing about marital alliances. The marriage of Ilango Picci, the daughter

of the Rashtrakuta King Krishna II with Aditta (and not with Raja Raja I as stated by Prof. Nilakanta Sastri) was the starting point of this policy. This reveals the political sagacity of Aditta I, one of the founders of the new dynasty. The Cola's marital relationship with Rashtrakutas is not so very much emphasized as their marital relationship with the Chalukyas probably because in this case there was more of estrangement than friendship between these two families. But it must be remembered even this estrangement was due to the marriage alliance. Parantaka I followed in the footsteps of his father Aditta in contracting diplomatic marriages and gave his daughter in marriage to the Rashtrakuta King Govinda IV, on whose behalf he sent a military expedition to the north thus inspiring for all times the hatred of Krishna III, the rival of his son-in-law, Govinda IV. Except in this context the Rashtrakuta war is not intelligible.

In other cases also the author throws new light on other foreign relationships of the Colas. The relationship of Kandaradittar with the Ganga country, the strained relationship between Raja Raja I and the Cera King Baskara Ravivarman, the events which led up to the battle of Udakai, the battle of Mudakkaru, and the military expeditions of Vira Rajendra are all fully described.

There are a few new identifications suggested by the author. Colan Ulaka Perumanar is identified with the Cola contemporary of the Pallava King Dantivarma. "The Cola of 96 Wounds" of Ottakuttar's poem is identified with the Cola King Vijayalaya. Tiru. Pandarathar identifies Adittan mentioned by Nambi Andar Nambi in the *present tense* as the conqueror of Kongu and Ceylon, with Adittan I even as against the popular view that Nambi Andar Nambi and his compilation of Tevaram took place in Raja Raja I's reign. Appar's "Tanjait-talikkulam" (தஞ்சைத்தளிக்குளம்) is identified with the sacred place on which Raja Raja the Great came to build his Great Temple at Tanjore—an explanation why Raja Raja chose that place.

There are according to the author a few mistaken ideas prevalent which he has attempted to correct. Parantaka I built a temple on the remains of his father Aditta at Tondaiman Arrur near

Kalathi in the Chittoor District. Prof. Nilakanta Sastri states that Parantaka made there provision for the feeding of 1000 Brahmins. Chittoor of some commercial importance was the rendezvous of all kinds of people and the Professor's statement may mislead one to think that the King had not cared for others. Tiru. Pandarattar in this book points out with the help of the inscription, the catholicity of Parantaka in providing not only for 300 Brahmins, but for 200 followers of the six sects and 500 people of other sects, holding thus the scale even amidst those warring sects. The next point is about the murder of Aditta Karikalan which is often surmised to have been engineered by Uttama Cola. Our author points out that this conclusion is incompatible with the subsequent behaviour of the members of the Cola family and suggests that this murder was brought about by a conspiracy of the high officials of the state. He tries to prove further that Rajamahendra was the elder brother of Vira Rajendra and the younger brother of Rajendra II and not the latter's son as assumed by some. He also attempts to disprove the theory of Prof. Nilakanta Sastri that Adhi Rajendra was killed in a rebellion organised against him by the oppressed Vaishnavites.

Even if the authors's conclusions are not all decisive he has certainly given the research scholars enough food for further thought. Probably this is the first original work of this kind in Tamil distinguished from mere text books and the author and the Annamalai University deserve to be congratulated on the production of this monumental work in chaste and lucid Tamil.

Having had something to do with the book I am personally glad that this book is seeing the light of the day at least now. I deem it a great privilege to introduce, at the instance of the author, with these few words the valuable work to the Tamil world with heartfelt thanks to the author and the University.

TAMILAGAM,
CHINTADRIPET,
MADRAS, 29-7-1949.

**T. P. MINAKSHISUNDARAN**

## இரண்டாம் பதிப்பின் முகவுரை

இச்சரித்திர நூலின் முதற்பதிப்பு இற்றைக்கு ஐந்து ஆண்டுகட்கு முன் வெளிவந்தது. இந்நூலை யான் எழுதியமைக்குரிய காரணங்களும் இதனைப்பற்றிய பிற செய்திகளும் இதன் பின்னேயுள்ள முதற்பதிப்பின் முகவுரையால் நன்கு விளங்கும். பின்னிகழ்ந்த எனது ஆராய்ச்சியில் அறிந்துகொண்ட செய்திகளுள் சிலவும் இப்பதிப்பில் உரிய இடங்களில் சேர்க்கப்பெற்றுள்ளன. சென்னையிலும் அண்ணாமலை நகரிலுமுள்ள பல்கலைக்கழகங்களின் தேர்விற்குப் பயின்றுகொண்டிருக்கும் மாணவர்கட்கு இந்நூல் பாடமாகவிருத்தலால் இவ்விரண்டாம் பதிப்பை விரைவில் வெளியிட வேண்டிய நிலை ஏற்பட்டது. அதனால் இந்நூலின் இறுதியில் பிற்சேர்க்கையாகச் சேர்த்து வெளியிடக் கருதியிருந்தவற்றுள் சிலவற்றை இப்பதிப்பில் சேர்க்க முடியாமற்போயிற்று.

இவ்விரண்டாம் பதிப்பை வெளியிட்ட அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தார்க்கும் இந்நூல் அச்சாகுங்கால் 'புரூப்' முதலியன திருத்தி அன்புடன் உதவி புரிந்த என் அரிய நண்பர் தமிழாராய்ச்சித்துறை விரிவுரையாளர் வித்வான் க. வெள்ளைவாரணர் அவர்கட்கும் எனது நன்றி உரியதாகும்.

இங்ஙனம்,

அண்ணாமலைநகர்,
16—9—'54

T. V. சதாசிவ பண்டாரத்தார்

# முதற்பதிப்பின் முகவுரை

ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்கு இன்றியமையாதவை என்று அறிஞர்கள் கருதுவனவற்றுள் அந்நாட்டின் சரித்திர நூல் சிறந்ததொன்ரும். முன்னோர் ஒழுகிக் காட்டிய உயர்ந்த நெறிகளையும் அன்னோர் கொண்டிருந்த சிறந்த பண்பினையும் பின்னோர்க்கு நினைப்பூட்டி, அவர்களை நல்வழிப்படுத்துவன நாட்டின் பழைய சரிதங்களே எனலாம். அதுபற்றியே, உலகில் நாகரிகம் பெற்ற நாட்டினர், தம் நாட்டின் உண்மை வரலாறுகளை ஆராய்ந்து அவற்றை மக்கள் எளிதில் அறிந்துகொள்ளுமாறு பல பல நூல்களை வெளியிட்டு வருகின்றனர். மேனுடுகளைப் பார்ப்போமாயின் அங்கே ஆண்டுதோறும் எத்தனையோ வகையில் சரித்திர நூல்கள் வெளிவந்து கொண்டிருக்கின்றன. அவற்றை மக்கள் ஆர்வத்தோடு படித்து, உணர்ச்சியும் ஊக்கமும் எய்தி முன்னேற்றத்திற்குரிய வழியிற் செல்லுகின்றனர். மேனுட்டு மக்கள் அத்துணை நலங்களையடைந்து சிறப்புறுவதற்குக் காரணம், அந்நாட்டின் சரித்திரங்கள் அன்னோர் படித்துணர்ந்து கொள்ளுமாறு அவர்களது தாய்மொழியில் வெளியிடப்பெற்றிருப்பதேயாம். ஆகவே, ஒரு நாட்டின் சரித்திரம் அந்நாட்டு மக்களது தாய்மொழியில் எழுதி வெளியிடப்பெற்ருல் அ∴து அன்னோரது அறிவு வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் உதவிபுரியும் என்பது தேற்றம்.

நம் தமிழ்நாடு, பிறமொழியாளரான ஏதிலார் ஆட்சிக்குட்பட்டுத் தன் பெருமையை இழப்பதற்குமுன், சேர, சோழ, பாண்டியர் என்னுந் தமிழ் வேந்தர்களால் அரசாளப்பெற்று ஒப்புயர்வற்ற நிலையில் விளங்கியது என்பது பண்டைத் தமிழ் நூல்களால் நன்கறியக்கிடக்கின்றது. அவ்வரசர்களின் வரலாற்றை நாம் அறிந்து

கொள்ளுமாறு நம் தமிழ்மொழியில் எத்தனைச் சரித்திர நூல்கள் எழுதப்பெற்றுள்ளன என்று பார்ப்போமானால் அவை விரல்விட்டெண்ணக்கூடிய நிலையில்தான் இருக்கின்றன. எனினும், நம் முன்னோரின் சரித்திரங்களையும் அரசியல் முறைகளையும் நாகரிகங்களையும் நம் தாய் மொழியில் படித்தறிந்துகொள்வதைக் காட்டிலும் நமக்கு மகிழ்ச்சியும் ஊக்கமும் அளிக்கத்தக்கது வேறொன்றுமில்லை. ஆனால், ஆராய்ச்சி முறையில் எழுதப்பெற்ற அத்தகைய நூல்கள் நம் தமிழ்மொழியில் மிகுதியாக வெளிவரவில்லை.

நம் தமிழ்நாட்டின் பழைய வரலாற்றை எழுதுவதற்குத் தக்க சாதனங்கள் இல்லையெனவும் அதனால்தான் சரித்திர நூல்கள் மிகுதியாக எழுதப்பெறவில்லை எனவும் ஒரு சிலர் குறைகூறுகின்றனர். அவர்கள் அங்ஙனம் கூறுவதற்குக் காரணம் உண்மையான தாய்நாட்டுப் பற்றும் ஊக்கமும் உழைப்பும் இல்லாமையேயாம். நாகரிகம் பெற்ற ஒரு நாட்டினர், தம் பழைய சரித்திரங்களை இவ்வாறு புறக்கணித்துவிட்டால் அன்னோர் தம் பண்டைப் பெருமையை இழந்தவராகக் கருதப்படுவர் என்பது ஒருதலை.

பண்டைத் தமிழ் வேந்தர்கள் எடுப்பித்த திருக்கோயில்களில் காணப்படும் பல்லாயிரக்கணக்கான கல்வெட்டுக்களும் அவ்வரசர்கள் வழங்கிய கொடைத்திறங்களைக் கூறும் செப்பேடுகளும் அவர்கள் கட்டியுள்ள கோயில்களின் சிற்ப அமைதியும் அன்னோர் ஆட்சியில் வழங்கிய நாணயங்களும் அம்மன்னர்களின் பேராதரவினால் வெளிவந்துள்ள தமிழ் நூல்களும் நம் நாட்டின் பண்டைச் சரித்திரங்களை ஆராய்ந்தெழுதுவதற்குப் பெரிதும் பயன்படுவனவாகும். அன்றியும், வெளிநாடுகளிலிருந்து நம் தமிழ் நாட்டிற்குவந்து பலவிடங்களைச் சுற்றிப்பார்த்துச் சென்ற யாத்திரிகர்களின் குறிப்புக்களும் தமிழகத்தோடு வாணிகத் தொடர்புகொண்டு நிலவிய புறநாட்டு வரலாறு

களும் நம்நாட்டு வரலாற்ருராய்ச்சிக்குப் பேருதவி புரிதல் அறியத்தக்கது. சங்ககாலத்திற்கு முற்பட்ட தமிழ் மக்கள் வரலாற்றை அறிதற்கு ஆதிச்சநல்லூர், அரிக்காமேடு, மொஹஞ்சதரோ, ஹாரப்பா முதலான இடங்களில் நிலத்தில் அகழ்ந்தெடுத்த புதைபொருள்கள் நன்கு பயன்படுதலைச் சரித்திர ஆராய்ச்சியில் வல்ல அறிஞர் பலரும் அறிவர். எனவே, வரலாற்ருராய்ச்சிக்கு நம் நாட்டில் தக்க சாதனங்கள் இல்லை என்று கூறுவது எவ்வாற்ருனும் ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று.

சென்ற பத்தொன்பதாம் நூற்ருண்டில் நம் நாடு ஆங்கிலேயர் ஆட்சியின்கீழ் அமைந்ததன் பயனுய், பல நூற்ருண்டுகளாக நாம் அறிந்துகொள்ள முடியாத நிலையில் மறைந்து கிடந்த நம் தமிழக வரலாறும் சிறிது சிறிதாக வெளிவரத்தொடங்கியது. நம்முன்னேர்களின் வரலாறுகளையும் மாண்பினையும் முதலில் நமக்கு உணர்த்தியவர்கள் ஐரோப்பிய ஆசிரியர்களே யாவர். நம் இந்திய அரசாங்கத்தினரும் சென்ற நூற்ருண்டின் பிற்பகுதியில் கல்வெட்டிலாகா ஒன்று நிறுவித் தக்க அறிஞர்களைக் கொண்டு கோயில்களிலுள்ள கல்வெட்டுக்களைப் படி எடுப்பித்தும் நிலத்தை அகழ்ந்து புதைபொருள் ஆராய்ச்சி செய்வித்தும் ஆங்காங்குக் கிடைக்கும் செப்பேடுகளையும் பழைய நாணயங்களையும் சேகரித்தும் அவற்ருல் அறியக் கிடக்கும் பழைய வரலாற்றுண்மைகளை ஆராய்ந்து வெளியிட்டு வந்தனர். அந்நியர் ஆட்சியினுல் நம் நாட்டில் பல தீமைகள் ஏற்பட்டிருத்தல் உண்மையேயெனினும் அதனுல் சில நன்மைகளும் கிடைத்துள்ளமையை நாம் மறந்துவிட முடியாது. அத்தகைய நன்மைகளுள் நமது பழைய வரலாற்றை நாம் அறிந்துகொள்ளுமாறு அரசாங்கத்தினர் கல்வெட்டிலாகா மூலம் செய்து வந்த அரிய செயல்கள் குறிப்பிடத்தக்கனவாகும்.

இனி, ஐரோப்பிய ஆசிரியர்களின் ஆராய்ச்சி முறையைப் பின்பற்றி நம் நாட்டறிஞருள் சிலரும் நம் பண்

டைச் சரிதங்களை ஆராய்ந்து ஆங்கிலமொழியில் நூல்கள் வெளியிட்டுள்ளனர். தமிழ்மொழி யொன்றே கற்ற நம் நாட்டு மக்களுக்கு அவ்வரிய நூல்கள் பயன்படமாட்டாவெனினும் நமது வரலாற்றைப் பிற நாட்டாரும் உணர்தற்கு அவை பெரிதும் பயன்படுமென்பதில் ஐயமில்லை. எனவே, தமிழொன்றே கற்ற நம்மனோர் இன்னும் அறிந்துகொள்ள முடியாத நிலையில்தான், நம் நாட்டின் பழைய வரலாறு உள்ளது. ஆகவே, அத்தகைய வரலாற்று நூல்களை நம் தமிழ் மொழியில் ஆராய்ந்து வெளியிடுவது எல்லா மக்கட்கும் நலம் புரியும் நற்றொண்டாகும். இக்கருத்தினையுட்கொண்டே 'பிற்காலச் சோழர் சரித்திரம்' என்ற இந்நூல் நம் தாய்மொழியாகிய தமிழில் எழுதப்பெற்றது என்பது யாவரும் அறியற்பாலதாகும்.

நிற்க, இளமையில் யான் ஆங்கிலக் கலாசாலையில் படித்துக்கொண்டிருந்த காலத்தில் எனக்குத் தமிழாசிரியராயிருந்த நற்றிணை உரையாசிரியர் காலஞ்சென்ற பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் அவர்கள் தாம் சில ஊர்களில் பார்த்த கல்வெட்டுக்களையும் அவற்றால் அறியப்படும் சோழமன்னர்கள் அரசியல் தலைவர்கள் தமிழ்ப் புலவர் வரலாறுகளையும் அடிக்கடி தமிழ் வகுப்புக்களில் எடுத்துக்கூறி அக்கல்வெட்டுக்களின் அருமை பெருமைகளையும் உணர்த்திச் சொல்வதுண்டு. அக்காலமுதல் கோயில்களிலுள்ள கல்வெட்டுக்களைப் படித்தறிய வேண்டும் என்ற விருப்பமும் தமிழ் வேந்தர் வரலாறுகளை உணரவேண்டும் என்ற ஆர்வமும் என் உள்ளத்தில் மிகுந்து கொண்டே வந்தன. அந்நாட்களில் காலஞ்சென்ற கோபிநாதராயர் அவர்கள், M. A. எழுதிய சோழவம்ச சரித்திரச் சுருக்கம் என்ற நூல் ஒன்று மதுரைத் தமிழ்ச் சங்கத்தாரால் அச்சிடப்பட்டு வெளிவந்தது. யான் கல்வெட்டுக்களைப் படித்துப் படி எடுக்கும் பயிற்சியில் ஈடுபட்டிருந்தபோது, அவற்றை ஆராய்ச்சி செய்து உண்மையுணர்தற்கு அந்நூல் பெரிதும் உதவியது என

லாம். பிறகு, கல்வெட்டுக்களையும் அரசாங்கக் கல்வெட்டிலாகா ஆண்டறிக்கைகளையும் தமிழ் நூல்களையும் ஆராய்ந்து யான் கண்ட வரலாற்றுண்மைகளை 1914-ஆம் ஆண்டு முதல் மதுரைத் தமிழ்ச் சங்கத்துத் திங்கள் வெளியீடாகிய செந்தமிழில் வெளியிட்டுவந்தேன். அங்ஙனம் வெளிவந்தவற்றுள் சோழன் கரிகாலன், சோழன் செங்கணான், அதிகமான் நெடுமானஞ்சி, திருவைகாவூர்க் கல்வெட்டுக்கள், கல்லாடமும் அதன் காலமும், முதல் கண்டராதித்த சோழர், உலாக்கொண்ட மூன்று சோழ மன்னர்கள், கல்வெட்டுக்களால் அறியப்படும் சில தமிழ்ப் புலவர்கள் முதலியவை குறிப்பிடத்தக்கனவாகும்.

1917-ஆம் ஆண்டில் யான் கும்பகோணம் வாணாதுறை உயர்தரக் கலாசாலையில் தமிழாசிரியனாயமர்ந்த பிறகு ஓய்வு கிடைத்தபோதெல்லாம் வரலாற்றாராய்ச்சி செய்து வந்தமையோடு சில ஊர்களுக்குச்சென்று கல்வெட்டுக்களைப் படியெடுத்துக்கொண்டும் வந்தேன். அக்கல்வெட்டுக்களையும் எனது ஆராய்ச்சியிற் கண்ட முடிபுகளையும் சரித்திர உண்மைகளையும் மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் 'செந்தமிழி'லும் கரந்தைத் தமிழ்ச்சங்கத்தின் 'தமிழ்ப் பொழிலி'லும் அவ்வப்போது யான் வெளியிட்டு வந்ததை அன்பர் பலரும் அறிவர்.

1930-ஆம் ஆண்டில் முதற் குலோத்துங்க சோழன் என்ற நூலையும் அதன் பின்னர், பாண்டியர் வரலாறு என்ற நூலையும் யான் வெளியிட்டபோது, சென்னையிலும் அண்ணாமலை நகரிலுமுள்ள பல்கலைக் கழகங்கள் அவ்விரு நூல்களையும் நன்கு மதித்துக் கல்லூரி மாணவர்கட்கும் வித்துவான் மாணவர்கட்கும் பாட புத்தகங்களாக அமைத்து ஆதரித்தமை எனக்கு ஊக்கத்தையும் மகிழ்ச்சியையும் அளித்தது. பிறகு, சோழர் வரலாற்றை ஆராய்ந்து விரிவாக எழுதவேண்டும் என்ற எண்ணம் என் உள்ளத்தில் நிலைபெற்றிருந்தது. ஆனால், அதற்குத்

தக்க வாய்ப்பும் ஓய்வும் கிடைப்பது எனக்கு அரிதா யிற்று. அதனால் அவ்வெண்ணமும் முயற்சியும் தளர்ந்து போயின. அங்கிலையில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தில் தமிழாராய்ச்சித்துறையில் ஓர் ஆசிரியனாக அமர்ந்து தமிழ்த்தொண்டாற்றும் பேறு இறைவன் திருவருளால் எனக்குக் கிடைத்தது. அங்நாட்களில் பல்கலைக் கழகத் தின் துணைவேந்தராக விளங்கிய காலஞ்சென்ற சர். கே. வி. ரெட்டி நாயுடு அவர்கள் யான் செய்யத்தொடங்கும் ஆராய்ச்சி யாது என்று வினவினார்கள். யான் அவர்கள் ஆணையின்படி நடக்கும் கடப்பாடுடையேன் என்றும் தென்னிந்திய வரலாற்றில் சோழர் சரித்திரம் எழுதுங் கருத்துடையேன் என்றும் விடையிறுத்தேன். அவர்கள், தென்னிந்திய வரலாற்றை ஆராய்ந்தெழுதுவது மிகக் கடினமான வேலை என்றும் முடியுமானால் செய்யலாம் என்றும் கூறினார்கள். யான் பல ஆண்டுகளாக வரலாற் றாராய்ச்சியில் பழகியிருத்தலையும் இரண்டு சரித்திர நூல்களும் பல ஆராய்ச்சிக் கட்டுரைகளும் எழுதி வெளி யிட்டிருத்தலையும் தெரிவித்து அவர்களது உடன்பாட் டைப்பெற்று எழுதத் தொடங்கினேன்.

கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இடைக்கால முதல் பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதி வரையில் சோழ இராச்சியத்தில் அரசாண்ட சோழ மன்னர்களின் வர லாற்றை ஆராய்ந்து இரண்டு பகுதிகளாக எழுதி முடித் தேன். அவற்றுள், முதற்பகுதி, கி.பி. 846 முதல் 1070 வரையில் ஆட்சிபுரிந்தோரின் வரலாற்றைத் தன்னகத் துக்கொண்டது; இரண்டாம் பகுதி கி. பி. 1070 முதல் 1279 வரையில் அரசாண்டவர்களின் வரலாற்றைத் தன் பாற்கொண்டது. இவ்விரு காலப்பகுதியிலும் ஆட்சி புரிந்தவர்கள், கடைச்சங்ககாலத்துச் சோழ மன்னர்கட் குச் சற்றேறக்குறைய அறுநூறு ஆண்டிற்குப் பிற்பட்ட வர்களாய் அவர்கள் வழியில் தோன்றியவர்களாதலின் இவ்வரலாற்று நூலுக்குப் ‘பிற்காலச் சோழர் சரித் திரம்’ என்று பெயரிடப்பட்டது. இச்சரித்திர நூலின்

மூன்றும் பகுதியாகச் சோழ அரசர்களின் அரசியல் முறை, அக்காலத்துக் கல்வி, கைத்தொழில், வாணிகம், நாணயம், சமயநிலை, படை, நாகரிகம், மக்களது செல்வ நிலை ஆகியவற்றை எழுதவேண்டும் என்ற எண்ண முடையவனாயிருந்தேன். இடையில் தமிழ் இலக்கிய வரலாறு எழுதுமாறு துணைவேந்தரின் ஆணை கிடைத்தமையால் மூன்றும் பகுதியைப்பற்றிய ஆராய்ச்சி தொடங்கப் பெறவில்லை. இனி, திருவருள் கூட்டுமேல் அதுவும் நிறைவேறும் என்பது என் கருத்து.

இச்சரித நூல் எழுதுவதற்கு யான் ஆதாரமாகக் கொண்ட நூல்கள் பலவாகும். அவற்றையெல்லாம் ஆங்காங்குக் கீழ்க்குறிப்பில் எடுத்துக்காட்டியுள்ளேன். அவற்றுள் கல்வெட்டிலாகா அறிஞர்கள் வெளியிட்டுள்ள கல்வெட்டுப் புத்தகங்களும் ஆண்டு அறிக்கைகளும்[1] திரு. K. A. நீலகண்ட சாஸ்திரியார் அவர்கள், M. A., ஆங்கிலத்தில் எழுதியுள்ள சோழர் சரித்திரமும் புலவர் பெருமக்கள் ஆராய்ந்து பதிப்பித்துள்ள சில தமிழ் நூல்களும் ஈண்டு குறிப்பிடத்தக்கனவாம். யான் சில ஊர்கட்குச் சென்று நேரில் கல்வெட்டுக்களைப் படித்து அறிந்துவந்த செய்திகளும் எனது ஆராய்ச்சியில் புதியனவாகக் கண்ட வரலாற்றுண்மைகளும் இதில் சேர்க்கப்பட்டுள்ளன.

எனக்கும் பிற ஆராய்ச்சியாளர்க்கும் கருத்து வேறுபாடுகள் நிகழும் இடங்களில் தக்க சான்றுகளுடன் ஆராய்ந்து என் முடிபினை நிறுவியுள்ளேன். இது போன்ற சரித்திர நூல்களில் சில இடங்களில் கருத்து வேறுபாடுகள் உண்டாதலும் எதிர் காலத்தில் புதியன

---

1. நம் நாட்டுப் பழைய வரலாறுகளையறிதற்குப் பேருதவியாக இருந்துவரும் தென்னிந்தியக் கல்வெட்டு ஆண்டறிக்கை வெளியிடும் செயலை இந்திய அரசியலார் நிறுத்திவிட்டனர். இச்செயல் பெரிதும் வருந்துதற்குரியதாகும்.

வாகக் கிடைக்கும் ஆதாரங்களால் சில செய்திகள் மாறு பட்டுப் போதலும் சில நிகழ்ச்சிகளின் காலக் குறிப்புக் கள் வேறுபடுதலும் இயல்பேயாம்.

வரலாற்றுராய்ச்சி செய்வோர்க்குப் பயன்படுமாறு இச்சரித்திர நூலின் இறுதியில் சோழ மன்னர்களின் மெய்க்கீர்த்திகளும், பழைய நூல்களிலும் உரைகளிலும் கண்ட அவர்களைப் பற்றிய பாடல்களும், சோழமன்னர் களின் மரபு விளக்கமும் சேர்க்கைகளாக வெளியிடப்பட் டிருக்கின்றன.

இந்நூல் எழுதுவதற்கு ஆதாரமாகவுள்ள பன்னூல்க ளையும் வெளியிட்டுள்ள பேரறிஞர் எல்லோர்க்கும் எனது நன்றி என்றும் உரியதாகும்.

தில்லையம்பதிக் கணித்தாகப் பெரும் பொருட்செலவில் அண்ணுமலைப் பல்கலைக் கழகம் நிறுவியும் அதில் சர். கூர்மா வேங்கடரெட்டித் தமிழாராய்ச்சிக் கழகம் அமைத் தும் மக்களது கல்வி வளர்ச்சிக்குச் சிறந்த தொண்டு புரிந்த தமிழ் வள்ளல் காலஞ்சென்ற டாக்டர் இராசா சர். மு. அண்ணுமலைச் செட்டியார், LL. D. அவர்கட்கும் இந்நூல் எழுதுவதற்கு எனக்கு அன்பு கூர்ந்து அனுமதி யளித்த காலஞ்சென்ற சர். K. V. ரெட்டி நாயுடு, K. C. I. E. அவர்கட்கும், பின்னர் துணைவேந்தராயிருந்த திரு. M. இரத்தினசாமி, M. A., C. I. E. அவர்கட்கும் இஞ்ஞான்று அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராக வுள்ள திருவாளர் டாக்டர் S. G. மணவாள ராமானுஜம், M. A., Ph. D. அவர்கட்கும், தமிழாராய்ச்சிக் கழகத்தின் முன்னுள் தலைவர் மகா மகோபாத்தியாய பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் அவர்கட்கும், காலஞ்சென்ற பேராசிரியர் கா. சுப்பிரமணியப் பிள்ளை, M. A., M. L., அவர்கட்கும் அன்பு கூர்ந்து முன்னுரை யுதவிய தமிழ்ப் பேராசிரியர் பன்மொழிப் புலவர் தெ. பொ. மீனுட்சிசுந் தரனுர், M. A., B. L., M. O. L. அவர்கட்கும், இப்போது

தமிழ்ப் பேராசிரியராகவுள்ள டாக்டர் அ. சிதம்பரநாதச் செட்டியார், M. A. அவர்கட்கும் என்றும் நன்றி பாராட்டும் கடப்பாடுடையேன்.

இந்நூல் விரைவில் வெளிவருமாறு செய்த பல்கலைக் கழக ரிஜிஸ்தரார் திருவாளர் S. சச்சிதானந்தம் பிள்ளை, B. A., L. T. அவர்களையும் அவ்வப்போது உசாத்துணையா யிருந்துதவிய தமிழாராய்ச்சிக்கழக விரிவுரையாளர்களாகிய திருவாளர்கள் வித்துவான் கோ. சுப்பிரமணிய பிள்ளை, M. A., B. L., E. S. வரதராச ஐயர், B. A., வித்துவான் ஒளவை சு. துரைசாமி பிள்ளை ஆகியவர்களையும் அவர்களுள் குறிப்பாக 'புரூப்' முதலியன திருத்தி அன்புடன் உதவிபுரிந்துவந்த திரு. வித்துவான் க. வெள்ளைவாரணனார், இந்நூலிற் சில பகுதிகளைப் படியெடுத்தும் பொருட்குறிப்பகராதியினைத் தொகுத்தும் உதவிய சிதம்பரம் பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளி ஆசிரியர் திரு. T. S. நடராசக் குருக்கள், B. A., L. T. வரலாற்றுப் படங்களை வரைந்துதவிய திரு. T. M. சம்பந்தநாயகர் ஆகியோரையும் எக்காலத்தும் மறவேன். நிழற்படங்களை வெளியிடவுதவிய இந்தியப் பழம் பொருளாராய்ச்சித் துறைத் தலைவர்க்கு எனது நன்றியுரியதாகும்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகம்,
அண்ணாமலை நகர்,
14—8—'49

இங்ஙனம்,
**T. V. சதாசிவ பண்டாரத்தார்**



## பொருளடக்கம்

தைக் கைப்பற்றியது—இரட்டபாடி நாட்டின்மீது படை யெடுத்துச் சென்று வாகை சூடியமை—வேங்கி நாட்டு நிலை—வேங்கி நாட்டில் சக்திவர்மனுக்கு முடிசூட்டியது—குந்தவை விமலாதித்தன் மணம்—வேங்கி நாட்டில் விமலாதித்தன் ஆட்சி — இராசராசன் கலிங்கத்தில் நடத்திய போர்—பழந்தீவு பன்னீராயிரத்தைக் கைப்பற்றல்—சோழராச்சியத்தின் உயர்நிலை—தன் மகன் முதல் இராசேந்திரனுக்கு இளவரசுப்பட்டம் சூட்டல்—இறுதிக் காலத்தில் திருவியலூரில் துலாபாரதானம் செய்தல்—உலோகமாதேவி இரணிய கருப்பம் புகுந்தமை—இராசராசன் சிறப்புப் பெயர்கள்—அப்பெயர்களால் சோழ மண்டலத்தில் வளநாடுகள் வழங்கி வந்தமை—தஞ்சையில் இராசராசேச்சுரம் எடுப்பித்தல்—அக்கோயிலைப் பற்றிய செய்திகள்—கருவூர்த்தேவர் பதிகம்—அப்பரடிகள் திருவீழிமிழலைத் திருப்பதிகத்தில் குறித்துள்ள தஞ்சைத் தளிக்குளமே தஞ்சை இராசராசேச்சுரம் என்பது—இராசராசனது சமயப் பொறை—சோழராச்சியம் முழுதும் அளக்கப் பெற்றமை — உலகளந்தான் — உலகளந்த கோல்—சோழ மண்டலத்தின் 9 வளநாடுகள்—மக்களது அமைதியான வாழ்க்கை — மனைவிமார்—இவனுடைய பட்டத்தரசி உலோகமாதேவீச்சுரம் எடுப்பித்தமை—இவன் தமக்கையிடத்தும் முன்னோரிடத்தும் காட்டிய பேரன்பு—அரிஞ்சயேச்சுரம்—செம்பியன் மாதேவி மண்டபம்—இவன் காலத்துக் குறுநில மன்னர்கள்—அரசியலதிகாரிகள்—இராசராச விசயம்—இராசராசேசுவர நாடகம்.

## 11. முதல் இராசேந்திர சோழன் — 145—193

பெற்றோர்—பிறந்த நாள் — இயற்பெயர் — அபிடேகப் பெயர்—முடி சூடிய காலம்—அக்காலத்தில் சோழராச்சியத்தின் பரப்பு—பரகேசரி இராசேந்திரன்—முதல் மகன் இராசாதிராசன் இளவரசுப்பட்டம் பெற்றமை--இராசேந்திரன் மெய்க்கீர்த்தி—திருவாலங்காட்டுச்செப்பேடுகள்—இடைதுறை நாடு, வனவாசி, கொள்ளிப்பாக்கை, மண்ணைக் கடக்கம் இவற்றைக் கைப்பற்றியமை—ஈழ நாட்டுப்போர்—சேரரை வென்றமை—பழந்தீவைக் கைப்பற்றியமை—பாண்டி மண்டலத்தில் சோழ பாண்டியர் பிரதிநிதியாயிருந்து ஆட்சி புரிதல்—முயங்கிப்போர்—வடநாட்டுப் படையெழுச்சி — தோல்வியுற்ற வங்காள

மன்னன் மகிபாலன் தலைமீது கங்கைநீர் நிரம்பிய குடம் கொண்டு வந்தமை—கங்கைகொண்ட சோழன்—வங்காளத்தில் ஆட்சிபுரிந்த சேன மரபினரின் முதல்வன் தமிழ் நாட்டு வீரனே என்னும் அறிஞர் பானர்ஜியின் கருத்து—கடாரப் படையெழுச்சி—இதில் வென்ற நாடுகளும் நகரங்களும்—பாண்டியர் மூவர் கலகம்—இளவரசன் இராசாதிராசன் அதனை அடக்கியமை—சேரரின் சுயேச்சை முயற்சியும் அதன் தோல்வியும்—வேணாடு, கூபகநாடு, இராமகுடநாடு இவற்றின் வேந்தர்களது தோல்வி—இரண்டாம் ஈழநாட்டுப்போர்—இளவரசன் நடத்திய மேலைச் சளுக்கியப்போர்—இராசேந்திரன் சிறப்புப் பெயர்கள்—கங்கைகொண்ட சோழபுரம் அமைத்துத் தலைநகராக்கியமை — கங்கைகொண்ட சோழேச்சுரம் — கருவூர்த்தேவர் பதிகம்—சோழகங்கம்—சைவாசாரியார்—சமயத்தொண்டு—சமயப்பொறை—மனைவிமாரும் மக்களும்—குறுநில மன்னர்—அரசியல் தலைவர்கள்—சோழராச்சியத்தின் மிக உயர்ந்தநிலை—இராசேந்திரன் உயிர் நீத்தபோது வீரமாதேவி உடனுயிர் துறந்தமை—பிரமதேசத்தில் நிவந்தம்.

## 12. முதல் இராசாதிராச சோழன் 194—214

பெற்றோர் — பிறந்த நாள் — இளவரசனுதல் — முடிசூடிய காலம்—ஈழநாட்டுப் போர்—மேலைச்சளுக்கியருடன் இவன் நடத்திய இரண்டாம் போர்—மூன்றும் போர்—கொப்பத்துப்போர்—அதில் இராசாதிராசன் உயிர் துறந்தமை—இவன் தம்பி இரண்டாம் இராசேந்திரன் பொருகளத்திலே முடிகவித்துப் போரில் வாகை சூடியமை—இராசாதிராசன் சிறப்புப்பெயர்கள்—தலைநகர்—பட்டத்தரசி—குறுநிலமன்னர்—அரசியல் தலைவர்.

## 13. இரண்டாம் இராசேந்திர சோழன் 215—227

இவன் போர்க்களத்தில் முடிசூடியமை—மெய்க்கீர்த்திகள்—ஈழநாட்டுப் போர்—மேலைச்சளுக்கியருடன் நடத்திய இரண்டாம் போர்—முடக்காற்றுப் போர்—இவன் தம்பிமார்களாகிய இராசமகேந்திரனும், வீரராசேந்திரனும் முடக்காற்றுப்போரில் கலந்துகொண்டமை—இராசமகேந்திரனே மும்முடி சோழன் என்பது—தலைநகர்—மனைவிமார் — மக்கள் — பேரன்மார் — இவன் தஞ்சைப்

# பிற்காலச் சோழர் சரித்திரம்

## முதல் அதிகாரம்

### சோழரின் தொன்மை

வடவேங்கடம் தென்குமரிக்கு இடையிலுள்ள நிலப்பரப்பு முற்காலத்தே தமிழகம்[1] என்று வழங்கப்பெற்றது. இப்போது இதனைத் தமிழ்நாடு என்றே யாவரும் கூறி வருகின்றனர். இதனைக் குடபுலம், குணபுலம், தென்புலம் என்ற மூன்று பகுதிகளாக[2]ப் பிரித்துப் பண்டைக் காலமுதல் ஆட்சி புரிந்து வந்தோர், சேர, சோழ, பாண்டியர் என்னும் தமிழ் மூவேந்தரேயாவர். இவர்கள் ஆட்சி புரிந்த பகுதிகள் முறையே சேரமண்டலம், சோழமண்டலம், பாண்டி மண்டலம் எனப்படும். இவர்கள் ஆசிரியர் தொல்காப்பியனார் காலத்திற்கு முன்னரே இத்தமிழ்நாட்டில் அரசாண்டு வந்தனர் என்பது 'வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு[3]' எனவும், 'போந்தை வேம்பே ஆரென வரூஉம்—மாபெருந் தானையர்[4]' எனவும் போதரும் தொல்காப்பியச் சூத்திரங்களால் நன்கு பெறப்படுகின்றது. இம் மூவேந்தருள் இடையிலுள்ள சோழரின் வரலாறே ஈண்டு ஆராயப் பெறுவது.

இனி, சோழர் என்பார் நம் தமிழகத்தின் கீழ்ப்பகுதியாகிய சோழமண்டலத்தைத் தொன்றுதொட்டு ஆட்சி

1. 'இமிழ்கடல் வரைப்பில் தமிழகம்' — சிலப்பதிகாரம். அரங். வரி 37.
2. சிறுபாணாற்றுப்படை—வரிகள் 47, 63, 79.
3. தொல். பொருள். செய்யுளியல், சூ. 79.
4. தொல். பொருள். புறத்திணையியல், சூ. 5.

புரிந்துவந்த அரசர் மரபினர் ஆவர். இவர்கள் எக்காலத்து இதனை ஆட்சிபுரியும் உரிமை எய்தினரென்றுதல், எவ்வேந்தரால் இதன் ஆட்சி முதலில் கைக்கொள்ளப் பட்டதென்றுதல் அறிந்துகொள்ளக்கூடவில்லை. எனவே, எவரும் ஆராய்ந்து அளந்து காண்டற்கரிய அத்துணைத் தொன்மை யுற்ற குடியினர் இன்னோர் என்பது நன்கு தெளியப்படும். ஆகவே, இவர்கள் படைப்புக்காலந் தொட்டு மேம்பட்டு வருந் தொல்குடியினர் என்று ஓர் அறிஞர் கூறி யிருப்பது[1] பொருத்தமுடையதேயாம்.

இராமாயண பாரத காலங்களிலும் இவற்றிற்கு முந்திய நாட்களிலும் இவர்கள் மிகச்சிறப்புடன் விளங்கியுள்ளனர் என்பதற்குப் பல ஆதாரங்கள் காணப்படுகின்றன. அன்றியும், கி. மு. மூன்றும் நூற்றுண்டில், மகத நாட்டில் செங்கோல் செலுத்திய அசோகச் சக்கரவர்த்தியின் ஆணையை யுணர்த்தும் கல்வெட்டுக்களிலும் சோழரைப்பற்றிய குறிப்புக்கள் உள்ளன. கி. பி. முதல் நூற்றுண்டில் மேனாட்டினின்றும் தமிழ்நாடு போந்த யவன ஆசிரியனாகிய தாலமி என்பவனது வரலாற்றுக் குறிப்பிலும் மேனாட்டு வரலாற்று ஆசிரியன் ஒருவனால் அப்பழைய காலத்தில் எழுதப்பட்ட 'பெரிப்ளூஸ்' என்ற நூலிலும் இவர்களைப்பற்றிய உயரிய செய்திகள் காணப்படுகின்றன. எனவே, கிரேக்கரும் உரோமரும் மிக உயர் நிலையிலிருந்த நாட்களில் நம் சோழரும் அவர்களுடன் வாணிகத் தொடர்புடையவர்களாய்ப் பெருமையோடு வாழ்ந்து வந்தனர் என்பது தெள்ளிது.

இத்துணைத் தொன்மையும் சிறப்பும் வாய்ந்த சோழர் குடியினர் வளம் நிறைந்த சோழமண்டலத்தைத் தமக்குரியதாகக்கொண்டு பண்டைக்கால முதல் ஆட்சிபுரிந்து வந்தமை பற்றி வளவர் என்றும் வழங்கப்பெற்றனர். இவர்களது நாடு, வான்ம் பொய்ப்பினும் தான் பொய்

1. திருக்குறள்—குடிமை 5, பரிமேலழகர் உரைக் குறிப்பு.

யார் த காவிரியால் வளம்பெற்றுச் சிறப்பெய்தியிருந்தமை யின் 'காவிரி நாடு' எனவும் 'பொன்னி நாடு' எனவும் அறி ஞர்களால் பாராட்டப்பட்டது. நிலவளமும் நீர்வளமும் ஒருங்கே அமைந்துள்ளமையால் இதன் நெல் விளைவு எந்த நாட்டினரும் புகழ்ந்து கூறும் இயல்புடையதாகும்.

'நெல்லுடையான் நீர் நாடர்கோ[1]' என்ற பழம்பாடற் பகுதியும், 'மேதக்க—சோழவளநாடு சோறுடைத்து[2]' என்ற ஔவைப் பிராட்டியாரது திருவாக்கும் ஈண்டு நோக்கற்பாலவாகும். நெல்லுடைமையால் குடியுயர்த லும் குடியுயர்தலால் கோன் உயர்தலும் இயல்பே யாம். ஆகவே, 'வளவனாயினும் அளவறிந்தழித்துண்' என்னும் முதுமொழியில் செல்வத்தின் மேல் எல்லைக் கோர் எடுத்துக்காட்டாகச் சோழர் குடியினர் கூறப் பெற்றிருப்பது உணரற்பாலதாகும். சுருங்கச் சொல்லு மிடத்து, செல்வ வளம் பற்றி மூவேந்தருள்ளும் முதல் வேந்தராய்த் திகழ்ந்தவர் இவர்களே எனலாம்.

சோழர் குடியினர் சூரிய குலத்தினர் என்பது சங்கத்துச் சான்றோர் கருத்தாகும்.[3] செப்பேடுகளும் கல்வெட்டுக்களும் அங்ஙனமே அறிவிக்கின்றன. இவர் களது கொடியும் இலச்சினையும் புலியுருவம் பொறிக்கப் பெற்றவையாகும். ஆத்திமாலையே இவர்கட்குரிய அடை யாள மாலை என்று தொல்காப்பியம் கூறுகின்றது[4]. இவர்கள் வீற்றிருந்து செங்கோல் செலுத்தும் பேறு பெற்ற திருவுடைய நகரங்கள் உறையூர், காவிரிப்பூம் பட்டினம், தஞ்சாவூர், கங்கைகொண்ட சோழபுரம், பழையாறை நகர் என்பன. இவற்றுள், உறையூரும்

1. யாப்பருங்கலவிருத்தி—பக். 229.
2. திரு. மு. இராகவையங்கார் அவர்களது பெருந்தொகை பக். 494.
3. மணிமேகலையின் பதிகம், வரிகள் 9—12.
4. தொல். பொருள். புறத்திணையியல். சூ. 5.

காவிரிப்பூம் பட்டினமும் சங்ககாலச் சோழ மன்னர்கட்குத் தலைநகரங்களாக விளங்கிய சிறப்புடையவை; தஞ்சாவூரும் கங்கை கொண்டசோழபுரமும் பிற்காலச் சோழ அரசர்கட்குத் தலை நகரங்களாக விளங்கிய பெருமை வாய்ந்தவை ; பழையாறை நகர், சோழர் பல்லவர்க்குக் கீழ்ச் சிற்றரசராயிருந்த காலப் பகுதியில் வாழ்ந்து வந்த இடமாகும். பிற்கர்லச் சோழர் ஆட்சிக்காலத்தும் இம்மாநகர் சோழரது இரண்டாவது தலை நகராய்ச் சிறப்புடன் நிலவியமை அறியற்பாலதாம்.

# இரண்டாவது அதிகாரம்

## கடைச் சங்கத்திறுதிக்காலத்திற்கும் பிற்காலச் சோழர் ஆட்சியின் தொடக்கத்திற்கும் இடைப்பட்ட சோழர் நிலை

மதுரைமாநகரில் நிலவிய கடைச்சங்கம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டின் இறுதியில் முடிவெய்தியது என்பது வரலாற்று ஆராய்ச்சியாளர்கள் ஆராய்ந்து நிறுவியுள்ள உண்மையாகும்[1]. எனவே, புறநானூறு, அகநானூறு, பத்துப்பாட்டு முதலான கடைச்சங்க நூல்களில் சொல்லப்பட்டுள்ள சோழ மன்னர்கள் கி. பி, மூன்றும் நூற்றாண்டிற்கு முன் சோழ மண்டலத்தில் ஆட்சிபுரிந்த முடியுடைவேந்தர் ஆவர். அவர்கள் காந்தமன், தூங்கெயிலெறிந்த தொடித்தோட் செம்பியன், உருவப்ப:.றேர் இளஞ்சேட்சென்னி, கரிகாலன், குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளி வளவன், நலங்கிள்ளி, மாவளத்தான், போரவைக்கோப்பெருநற்கிள்ளி, வேற்ப:.றடக்கைப் பெருவிறற்கிள்ளி, நெடுங்கிள்ளி, இராசசூயம் வேட்டபெருநற்கிள்ளி, செங்கணான், நல்லடி[2] என்போர். அன்னோர் வரலாறுகளும் மிகச் சுருக்கமாகவே சங்க நூல்களில் காணப்படுகின்றன. கடைச்சங்கத் திறுதிக் காலத்திற்குப் பிறகு கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இடையில் தஞ்சைமாநகரைக் கைப்பற்றி அரசாளத் தொடங்கிய சோழன் விசயாலயன் காலம் வரையில் சோழரின் செய்திகள் நன்கு புலப்படவில்லை. இவ்விடைக்காலப் பகுதியில் சோழ அரசர்கள் தாழ்ந்த

1. 'ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முந்திய தமிழர்' என்ற ஆங்கில நூலால் இதனையறியலாம். செந்தமிழ்த் தொகுதி 15. பக். 3-24; தொகுதி 17 பக். 185-208.
2. இவன் செங்கணான் மகன் என்பது அன்பிற் செப்பேடுகளால் அறியப்படுகிறது. (Epi. Ind., Vol. 15, No. 5) அகநானூற்றிலுள்ள 356-ம் பாடலில் இவன் கூறப்பட்டிருத்தல் காண்க.

நிலையை எய்திச் சோழ நாட்டில் ஒரு சிறு பகுதியைத் தமக்குரியதாகக்கொண்டு குறுநில மன்னராய்ப் பிற வேந்தர்க்கு அடங்கி வாழ்ந்து வந்தனராதல்வேண்டும். அக்காலத்தில் வெளிவந்துள்ள செப்பேடுகளும், கல்வெட்டுக்களும், தமிழ்நூல்களும் இவர்கள் சோழநாட்டில் இருந்தனரென்ற அளவில் உணர்த்துகின்றனவேயன்றி இவர்களது பிற செய்திகளைக் கூறவில்லை. இதற்குக் காரணம், இவர்கள் தம் பெருமை யிழந்து தாழ்ந்த நிலையிலிருந்தமையேயாம்.

இனி, அக்காலப் பகுதியில் நிகழ்ந்தவற்றை ஆராய்ந்து இவர்கள் நிலையை இயன்றவரையில் உணர்ந்துகொள்வதும் இன்றியமையாததாகும். கி. பி. நான்கு ஐந்தாம் நூற்றுண்டுகளில் நம் தமிழகம் களப்பிரர் என்ற ஒரு வகையாரது ஆட்சிக்கு உட்பட்டிருந்தது என்பது பல ஆதாரங்களால் அறியக்கிடக்கின்றது[1]. பாண்டிநாடு களப்பிரரால் கைப்பற்றப்பட்டிருந்த செய்தி வேள்விக்குடிச் செப்பேடுகளாலும் புலனுகின்றது[2]. அந்நாட்களில் தான் சோழரும் தம் நாட்டைக் களப்பிரரிடம் இழந்திருத்தல் வேண்டும் என்பது ஒருதலை. முதலில், பாண்டியர் தாம் இழந்த நாட்டை மீண்டும் கைப்பற்றித் தமிழகத்தின் தென்பகுதியில் தம் பேரரசை நிறுவி அதனை உயர் நிலைக்குக் கொணர்ந்து ஆட்சிபுரிந்து வருவாராயினர். சோழநாட்டைக் களப்பிரரிடமிருந்து கைப்பற்றிய பல்லவர், தமிழகத்தின் கீழ்ப்பகுதிக்குப் பேரரசராய் விளங்குவாராயினர்[3]. இந்நிலையில் சோழர் தம் நாட்டைக் கைப்பற்றித் தமக்குரியதாகக்கொண்டு ஆட்சி நடத்துவதற்குத் தக்க காலமும் துணைவலியும் அமையாமையால் காலங்கருதி அடங்கி வாழ்ந்துவந்தனர். எனவே, அந்

1. The Colas Vol. I. pp 119-121; பாண்டியர் வரலாறு—பக். 21, 22.
2. Epigraphia Indica, Vol. XVII, No. 16.
3. Kasakudi Plates of Nandivarma Pallavamalla—South Indian Inscriptions, Vol. II, No. 73.

நாட்களில் இவர்கள் பல்லவர்க்குத் திறை செலுத்தும் குறுநில மன்னராயிருந்தனர் என்பது தேற்றம்.

சோழர் அந்நிலையிலிருந்த நாட்களில் பண்டைத் தலைநகரங்களாகிய உறையூர், காவிரிப்பூம்பட்டினம் என்பவற்றில் தங்கி வாழ்ந்துவந்தனர் என்பதற்குத் தக்க சான்றுகள் இல்லை. ஆகவே, இவர்கள் வேறு ஒரு நகரத்தில்தான் இருந்திருத்தல் வேண்டும். வரலாற்று ஆராய்ச்சியாளருள் சிலர், கோனாட்டின் தலைநகராகிய கொடும்பாளூரில் அந்நாட்களில் இவர்கள் தங்கியிருந்தனர் என்று கூறுகின்றனர்; மற்றுஞ் சிலர் இவர்கள் உறையூர்ப் பக்கத்தில் இருந்திருத்தல்வேண்டும் என்கின்றனர்[1]. இவற்றையெல்லாம் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. கோனாடு என்பது புதுக்கோட்டை இராச்சியத்தில் முற்காலத்திலிருந்த ஒரு நிலப்பரப்பாகும். அது, சோழ மண்டலத்திற்கும் பாண்டி மண்டலத்திற்கும் இடையில் அமைந்திருந்த ஒரு சிறு நாடு எனலாம். அந்நாட்டிலிருந்த கொடும்பாளூரில் இருக்குவேள் என்ற குடியினர் இருந்தனர் என்பதும் அவர்கள் சிலகாலம் பாண்டியர்க்கும் சிலகாலம் பல்லவர்க்கும் அடங்கித் திறை செலுத்திக்கொண்டு குறுநில மன்னராயிருந்து வந்தனர் என்பதும் சில கல்வெட்டுக்களால் புலப்படுகின்றன[2]. அவர்கள் கடைச்சங்க நாளில் வாழ்ந்த இருங்கோவேளின் வழியினர்; சோழ மரபினர் அல்லர். எனவே, கொடும்பாளூரில் இருவேறு குறுநில மன்னர் ஆட்சிபுரிந்துகொண்டிருந்தனர் என்று கொள்வது எவ்வாற்றானும் ஏற்புடையதன்று. ஆகவே, சோழர் குறுநில மன்னராயிருந்த காலத்தில் கொடும்பாளூரில் இருந்திலர் என்பது திண்ணம்.

இனி, சைவ சமய குரவருள் ஒருவராகிய திருநாவுக்

1. The Colas, Vol. II, p. 131.
2. Annual Report on South Indian Epigraphy for 1927, part II, para 73. Inscriptions of the Pudukkottai State, No. 14.

கரசு அடிகள், சோழநாட்டில் பழையாறை வடதளியில் இறைவனை வணங்குவதற்குச் சென்றபோது அக்கோயிலில் சிவலிங்கப் பெருமானை அமண் சமயத்தினர் மறைத்து வைக்கவே, அடிகள் உள்ளம் வருந்தினாராக, அதனை யுணர்ந்த அவ்வூரிலிருந்த வேந்தன், அடிகளது இன்னலைப்போக்கி வடதளிப்பெருமானை வழிபடச் செய்து, சிறந்த விமானம் ஒன்றும் எடுப்பித்து, நாள் வழிபாட்டிற்கு நிவந்தங்களும் அளித்தனன் என்று திருத்தொண்டர் புராணமாகிய பெரியபுராணம் கூறுகின்றது[1]. இதில் குறிப்பிடப்பெற்ற அரசன், அடிகள் காலமாகிய கி. பி. ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் சோழநாட்டில் பழையாறை[2] என்னுந் தொன்னகரில் தங்கி வாழ்ந்து கொண்டிருந்த சோழர் மரபினனாகிய ஒரு குறுநில மன்னன் என்பதில் ஐயமில்லை. அந்நகரம் மிகப் பழமை வாய்ந்ததொன்று. அந்நகரில் பண்டைச் சோழரது அரண்மனையிருந்த இடம் இக்காலத்தில் சோழமாளிகை என்ற பெயருடன் ஒரு தனி ஊராக உளது. அதனைச் சுற்றி நாற்புறத்திலும் ஆரியப்படை வீடு, பம்பைப்படைவீடு, புதுப்படைவீடு, மணப்படைவீடு என்ற நான்கு பெரும் படைவீடுகள் அக்காலத்தில் சோழ மன்னர்களால் அமைக்கப்பட்டிருந்தன. அவை நான்கும் இந்நாளில் தனித்தனி ஊர்களாக உள்ளன. பிற்காலத்தில் ஆட்சி புரிந்த விசயாலய சோழன் வழியினரும் அப்பழையாறை நகரைத் தமக்குரிய இரண்டாவது தலைநகராகக்கொண்டது அதன் தொன்மைத் தொடர்பு நோக்கியேயாம். இரண்டாம் பராந்தகன், கங்கைகொண்ட சோழன் முதலானோர் அம்மாநகரில் பல நாட்கள் தங்கியிருந்தமையும் அறியத்தக்கது. கி. பி. பத்து, பதினொன்றாம் நூற்றாண்டு

---

1. பெரிய புராணம், திருநாவுக்கரசு நாயனார் புராணம்-பாடல்கள், 294-299.

2. பழையாறைநகர் இந்நாளில் ஒரு சிற்றூராகக் கும்பகோணத்திற்குத் தென்மேற்கே உளது. அது முற்காலத்தில் 5 மைல் நீளமும் 2 மைல் அகலமுள்ள பெரு நகராயிருந்தது.

களில் சோழ அரச குடும்பத்தினருள் சிலர் அங்கு வாழ்ந்துவந்தனர் என்பது கல்வெட்டுக்களால் புலப்படுகின்றது.[1] எனவே, அது சோழரது பழைய தலைநகரங்களுள் ஒன்றாயிருத்தல்வேண்டும் என்பது வெளியாதல் காண்க. அந்நகரில்தான், பல்லவர் காலத்தில் குறுநில மன்னராயிருந்த சோழர் இருந்தனர் என்பது ஈண்டு உணரற்பாலதாகும்.

சமயகுரவராகிய சுந்தரமூர்த்திகள் கூறியுள்ள 'கருவூர்த்துஞ்சிய புகழ்ச்சோழர், என்பார் கி. பி. ஆரும் நூற்றுண்டிலாதல் அதற்குமுன்னராதல் இருந்திருத்தல் வேண்டும். அவரைப்பற்றிய தெளிவான செய்திகள் கிடைக்கவில்லை.

கி. பி. ஏழாம் நூற்றுண்டின் இடையில் பாண்டி மண்டலத்தில் மதுரை மாநகரிலிருந்து ஆட்சிபுரிந்தவனும் அறுபான்மும்மை நாயன்மார்களுள் ஒருவனும் சுந்தர மூர்த்திகளால் "நெல்வேலி வென்ற நின்றசீர் நெடுமாறன்[2]" என்று திருத்தொண்டத் தொகையில் பாராட்டப்பெற்றவனும் ஆகிய பாண்டியன் அரிகேசரி மாறவர்மன் மனைவி மங்கையர்க்கரசி, ஒரு சோழ மன்னன் மகள் ஆவள். இதனை, 'மங்கையர்க்கரசி வளவர்கோன் பாவை வரிவளைக்கைமடமானி - பங்கயச் செல்வி பாண்டிமாதேவி,[3] என்னும் திருஞானசம்பந்தர் அருட்பாடலால் நன்கறியலாம். மங்கையர்க்கரசியின் தந்தை மணிமுடிச் சோழன் என்னும் பெயரினன் என்பது அவ்வடிகள் திருவாக்கினல் [4] உணரப்படுகின்றது. ஆகவே, கி. பி. ஏழாம் நூற்றுண்டின் இடைப்பகுதியில் மணிமுடிச்சோழன் என்ற

1. Ins. 249 of 1923 ; S. I. I., Vol. III, No. 205.
2. திருத்தொண்டத்தொகை—பாடல் 8.
3. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் தேவாரம் - திருவாலவாய்-1
4. ஷை ஷை 6

மன்னன் ஒருவன் சோழநாட்டில் இருந்தனன் என்பது பெறப்படுதல் காண்க.

கி. பி. எட்டாம் நூற்றுண்டின் முதற் பகுதியில் சுந்தரமூர்த்திகள் சேரமான் பெருமாளுடன் மதுரைமாநகர்க்குச் சென்றபோது, அவர்களைப் பாண்டி வேந்தன் ஒருவனும் அந்நகரில் முன்னரே போய்த் தங்கியிருந்த அவன் மருகன் சோழமன்னன் ஒருவனும் எதிர்கொண்டழைக்க, எல்லோரும் சோமசுந்தரக் கடவுள் திருக்கோயிலுக்குச் சென்றுர்கள் என்று பெரியபுராணம்[1] கூறுகின்றது. அன்றியும், சுந்தரமூர்த்திகள் மதுரையம்பதிக்கு அண்மையிலுள்ள திருப்பரங்குன்றத்திற்குச் சென்று, அங்குத் தாம் பாடிய பதிகத்தின் இறுதிப் பாடலில் அதனைச் சேர சோழ பாண்டியர் ஆகிய மூவேந்தர் முன்னே பாடியதாகக் கூறியுள்ளனர்[2]. அடிகள் குறிப்பிட்டுள்ள சேரர், சேரமான் பெருமாள் நாயனுர் என்பதும், சோழன், பாண்டியன் மகளை மணந்து மதுரையில் அப்போது தங்கியிருந்த ஒரு சோழ அரசகுமாரன் என்பதும், பாண்டியன், கி.பி. ஏழாம் நூற்றுண்டின் இறுதியிலும் எட்டாம் நூற்றுண்டின் தொடக்கத்திலும் மதுரையிலிருந்து ஆட்சிபுரிந்து கொண்டிருந்த பாண்டியன் கோச்சடையன் ரணதீரன் என்பதும் ஆராய்ச்சியால் புலப்படுகின்றன.

திருவேங்கடத்தைச் சார்ந்த திருச்சானூர்த் திருஇளங்

---

1. சேரமான் தோழருமச் சேரர்பிரா னும்பணிப்பூண்
ஆரமார்பரை மதுரை ஆலவாயினில் வணங்க
வாரமா வந்தணைய வழுதியார் மனக்காதல்
கூரமாநகர் கோடித் தெதிர்கொண்டு கொடுபுக்கார்
[கழறிற்—புரா. 91]
தென்னவர்கோன் மகளாரைத் திருவேட்டு முன்னரே
தொன்மதுரை நகரின்கண் இனிதிருந்த சோழனுர்
அன்னவர்கள் உடன்கூட அணையவவருங்கூடி
மன்னுதிரு ஆலவாய் மணிக்கோயில் வந்தணைந்தார்
[ஷை 92.]
2. சுந்தரமூர்த்திகள் திருப்பரங்குன்றப் பதிகம்—பா 11.

கோயிற் பெருமானுக்குப் பல்லவ வேந்தனாகிய தந்திவர்மன் ஆட்சியில் சோழநாட்டுச் சோழனூர் உலக பெருமானார் திருவிளக்கு வைத்து அதற்கு முதற்பொருளாக முப்பது கழஞ்சு பொன் அளித்துள்ளமை அவ்வூர்க் கல்வெட்டால் அறியப்படுகின்றது [1]. இவன் கி. பி. எட்டாம் நூற்றாண்டின் இறுதியிலும், ஒன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் சோழ நாட்டில் வாழ்ந்துகொண்டிருந்த ஒரு சோழர் குலக் குறுநில மன்னன் ஆவன்.

கி. பி. 831-ஆம் ஆண்டில் குமாராங்குசன் என்ற பெயருடைய சோழ மன்னன் ஒருவன் இருந்தனன் என்பது பல்லவ வேந்தனாகிய தெள்ளாறு எறிந்த நந்திவர்மன் ஆட்சியில் வெளியிடப்பெற்ற வேலூர்ப்பாளையச் செப்பேடுகளால் வெளியாகின்றது [2]. அச்செப்பேடுகளில் முதலில் நந்திவர்மன் ஆட்சியாண்டு வரையப்பெற்றுப் பிறகு மற்றைச்செய்திகள் குறிக்கப்பட்டிருத்தலால் அச்சோழன் நந்திவர்மப் பல்லவனுக்குத் திறை செலுத்திக் கொண்டிருந்த ஒரு சிற்றரசன் என்பது நன்கு துணியப்படும். அவன் சோழர் குலத்தில் தோன்றிய வீரர் தலைமணி என்றும் கொடையில் கர்ணனைப்போன்றவன் என்றும் நேர்மையான ஒழுக்கமுடையவன் என்றும் அச்செப்பேடுகள் புகழ்ந்து கூறுகின்றன. அவன் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் சோழநாட்டில் குறுநில மன்னனாக வாழ்ந்துகொண்டிருந்த ஒரு சோழர் குலத் தோன்றல் என்பதில் ஐயமில்லை.

கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இடையில், கும்பகோணம் என்று இந்நாளில் வழங்கும் குடமூக்கில் நடைபெற்ற போரில் பாண்டியன் சீமாறன் சீவல்லபன் பரச்சக்ர கோலாகலன் என்பான், சோழர், பல்லவர், கங்கர் முதலானோரைப் போரில் வென்று புறங்காட்டி ஓடச்செய்

1. S. I. I., Vol. XII, No. 43.
2. Ibid, Vol. II, No. 98.

தனன் என்று சின்னமனூர்ச் செப்பேடுகள்[1] உணர்த்து கின்றன. கி.பி. 825 முதல் கி.பி. 847 வரையில் ஆட்சி புரிந்த தெள்ளாறு எறிந்த நந்திவர்மன், சோழன் ஒருவனைப்போரில் வென்றான் என்று அவன் மீது பாடப்பெற்ற நந்திக்கலம்பகம் என்ற நூல் கூறுகின்றது[2]. எனவே, கடைச் சங்க காலத்திற்குப் பிறகு கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதி வரையில் குறுநில மன்னரா யிருந்த சோழர், சில காலங்களில் பாண்டியர்க்கும் சில காலங்களில் பல்லவர்க்கும் திறை செலுத்திக்கொண்டு அவர்கட்கு அடங்கிவாழ்ந்து வந்தனர் என்பது உய்த் துணரப்படுகிறது.

இதுகாறும் விளக்கியவாற்றால் சோழர், தம் வலி குன்றியிருந்த காலத்தில் வேறு நாடுகட்குப் போகவில்லை என்பதும் சோழ நாட்டிலேயுள்ள பழையாறை நகரில் சிற்றரசராயிருந்து வந்தனர் என்பதும் நன்கு புலனாதல் காண்க.

இஃது இங்ஙனமாக, சோழர் குறுநில மன்னராயிருந்த காலத்தில் கடப்பை கர்நூல் ஜில்லாக்களுக்குச் சென்று அங்கே வாழ்ந்துகொண்டிருந்தனர் என்பது சில வர லாற்று ஆராய்ச்சியாளரது கொள்கையாகும்[3]. அவர்கள் அவ்வாறு கருதுவதற்கு இரு காரணங்கள் சொல்லப் படுகின்றன.

ஒன்று, சீன வழிப்போக்கனாகிய ஹியூன்சாங் என் பவன் கி.பி. ஏழாம் நூற்றாண்டின் இடையில் தமிழகத் துக்கு வந்து சுற்றிப்பார்த்துவிட்டுத் திரும்பியபோது, சோழநாடு காஞ்சீபுரத்திற்கு வடமேற்கே இருப்பதாகத் தன் யாத்திரைக்குறிப்பில் வரைந்திருப்பது. மற்றொன்று

1. S. I. I., Vol. III, No. 206.
2. நந்திக்கலம்பகம், பாடல்கள் 14, 27, 31, 42, 81.
3. Historical Sketches of Ancient Dekhan, pp. 205 & 206.

கர்நூல், கடப்பை ஜில்லாக்களில் கிடைத்துள்ள தெலுங்கச் சோழர் கல்வெட்டுக்களிலும் செப்பேடுகளிலும் அவர்கள் காவிரியாற்றிற்கு இருமருங்கும் கரைகண்டசோழன் கரிகாலன் வழியினர் என்று குறிக்கப் பெற்றிருப்பது[1]. சோழ மன்னர்கள் ஏழு எட்டாம் நூற்றுண்டுகளில் தமக்குரிய சோழநாட்டிலேயே இருந்தனர் என்பதற்குத் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்திகள் ஆகிய சமய குரவரது அருட்பாடல்களும் நந்திக்கலம்பகமும் வேலூர்ப்பாளையச் செப்பேடுகளும் சின்னமனூர்ச் செப்பேடுகளும் பெரிய புராணமும் தக்க சான்றுகளாக உள்ளன என்பது முன்னரே விளக்கப்பட்டது. ஆகவே, சோழர் குறுநில மன்னராயிருந்த காலத்தில் வேறு நாடு புகுந்து வதிந்தனர் என்ற கொள்கை வலியுடைத்தாகாமை உணர்க.

---

1. கி.பி. ஏழு எட்டாம் நூற்றுண்டுகளில் கடப்பை கர்நூல் ஜில்லாக்களிலிருந்த தெலுங்கச் சோழர், சோழன் கரிகாலன் வழியினருள் வேறு ஒரு கிளையினர் ஆவர். அவர்கள் எப்போது அங்குப்போய்த்தங்கினர் என்பது புலப்படவில்லை. அன்னோர் தெலுங்கராகவே மாறிவிட்டனர். தமிழகத்திற்கும் அவர்கட்கும் சிறிதும் தொடர்பில்லை. ஆகவே, அன்னோர் வரலாறு ஈண்டு எழுதப்படவில்லை.

# மூன்றும் அதிகாரம்

## சோழன் விசயாலயன் கி. பி. 846-881.

சோழர் பேரரசை நிறுவ முதலில் அடிகோலியவன் கி. பி. ஒன்பதாம் நூற்றுண்டின் இடையில் எழுந்த விசயாலயன் என்னும் சோழ மன்னனே யாவன். இவன் தஞ்சைமா நகரைக் கைப்பற்றி அதனைத் தன் தலைநகராக வைத்துக்கொண்டனன் என்று திருவாலங்காட்டுச் செப்பேடுகள்[1] உணர்த்துகின்றன. நகரத்திற்கு இன்றியமையாத எல்லா நலங்களுடன் தஞ்சாபுரி என்னும் மாநகரை விசயாலய சோழன் புதிதாக அமைத்தான் என்று கன்னியாகுமரிக் கல்வெட்டு[2]க் கூறுகின்றது. விசயாலயன் காலத்திற்குப் பல ஆண்டுகளுக்கு முன்னரே தஞ்சைமா நகர் சிறப்புடன் இருந்தது என்பது கி. பி. எட்டாம் நூற்றுண்டில் பொறிக்கப்பெற்ற செந்தலைக் கல்வெட்டுக்களால்[3] புலனுகின்றது. ஆகவே தஞ்சாவூரை விசயாலயன் புதிதாக அமைத்தான் என்று கன்னியாகுமரிக்கல்வெட்டு உரைப்பது பொருத்தமில் கூற்றேயாம். எனவே இவ்வேந்தன் அதனைப் பிறரிடமிருந்து கைப்பற்றினன் என்று திருவாலங்காட்டுச் செப்பேடுகள் கூறுவது வலியுறுதல் காண்க[4].

இனி, விசயாலயன் என்பான் யாவன்? இவனுக்கும் பண்டைச் சோழமன்னர்க்குமுள்ள தொடர்பு யாது?

---

1. S. I. I., Vol. III, No. 205.
2. Epigraphia Indica, Vol. XVIII, No. 4.
3. Ibid, Vol. XIII, pp. 142 and 144.
4. திருக்கோவலூர்த் தாலூகா வீரசோழபுரத்தில் வீரக்கல் ஒன்றில் வரையப்பெற்றுள்ள 'தஞ்சைகொண்ட கோப்பரகேசரிவர்மற்கு' என்று தொடங்கும் கல்வெட்டு இவ்வுண்மையை விளக்குதல் அறியத்தக்கது.

Annual Report on South Indian Epigraphy for 1936, Part II, Para 34.

இவன் தஞ்சாவூரை யாரிடமிருந்து எப்போது கைப்பற்றிக் கொண்டனன் என்பவற்றை ஈண்டு ஆராய்வாம்.

தெள்ளாறெறிந்த நந்திவர்மன் காலத்திலிருந்தவனாக வேலூர்ப்பாளையச் செப்பேடுகளால் அறியப்படும் குமாராங்குசன்[1] என்ற சோழ மன்னனுக்கு இவன் புதல்வனாயிருத்தல் வேண்டும் என்று எண்ணப்படுகின்றது. எனினும், இதனை ஒரு தலையாகத் துணிதற்கேற்ற ஆதாரங்கள் இப்போது கிடைத்தில. இவ்விசயாலயன் வழியினரான பிற்காலச் சோழமன்னரின் ஆட்சிக் காலங்களில் வரையப்பெற்ற அன்பிற் செப்பேடுகளும்[2] ஆனைமங்கலச் செப்பேடுகளும்[3] திருவாலங்காட்டுச் செப்பேடுகளும்[4] கன்னியாகுமரிக் கல்வெட்டும்[5] கடைச்சங்க காலத்திற் புகழுடன் விளங்கிய பெருநற்கிள்ளி, கரிகாலன், செங்கணான், நல்லடி என்னும் சோழ அரசர்களின் வழியில் தோன்றியவன் விசயாலயன் என்று உறுதியாகக் கூறுகின்றன. இச்செய்தி புனைந்துரை என்று எண்ணுவதற்குச் சிறிதும் இடமில்லை. அன்றியும், அக்காலத்திலிருந்த சோழமன்னர்கள், தாம் கடைச்சங்ககாலத்துச் சோழரின் வழித்தோன்றல்கள் என்பதைத் தெளிவாக உணர்ந்திருந்தனர் என்பது மேலே குறிக்கப்பட்டுள்ள அவர்கள் செப்பேடுகளாலும் கல்வெட்டினாலும் நன்கறியக்கிடக்கின்றது.

சங்ககாலச் சோழரின் வழியினரே கி. பி. ஒன்பதாம் நூற்றுண்டின் இடையில் சோழர் பேரரசு நிறுவிப் புகழோடு ஆட்சிபுரியத் தொடங்கியவர்கள் என்பது ஒட்டக்

1. S. I. I., Vol. II, No. 98.
2. Epigraphia Indica., Vol. XV, No. 5.
3. Ibid, Vol. XXII, No. 34 (The Larger Leiden Plates)
4. S. I. I., Vol. III, No. 205.
5. Travancore Archaeological Series, Vol. III, No. 34.

கூத்தர் பாடிய மூவருலாக்களினாலும்[1] இனிது பெறப்படுகிறது. இச்செய்தி, கவிச்சக்கரவர்த்தியாகிய சயங்கொண்டாரது கலிங்கத்துப் பரணியாலும்[2] உறுதியெய்துகின்றது. ஆகவே, கடைச்சங்க காலத்துச் சோழரின் வழியில் தோன்றியவனே விசயாலயன் என்பது தெள்ளிதின் விளங்குதல் காண்க.

கி. பி. எட்டாம் நூற்றாண்டிலிருந்த முத்தரையன், 'தஞ்சைக்கோன்'[3] எனவும் 'தஞ்சை நற்புகழாளன்'[4] எனவும் கல்வெட்டுக்களில் குறிக்கப்பட்டிருத்தலால், தஞ்சைமாநகர் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் சோழர் தலைநகராதற்கு முன்னர் முத்தரையர்க்குரிய சிறந்த நகரமாக இருந்தது என்பது நன்கு வெளியாகின்றது.

இனி, முத்தரையர் என்பார், தஞ்சைமா நகர்க்கு வடமேற்கே இந்நாளில் செந்தலை என்று வழங்கும் சந்திரலேகைச் சதுர்வேதிமங்கலத்திலிருந்து[5] அதனைச் சூழ்ந்த நாட்டை ஆண்டுவந்த குறுநில மன்னர் ஆவர். தஞ்சைக் கண்மையிலுள்ள வல்லமும் அவர்கட்குத் தலைநகராக இருந்திருத்தல் வேண்டும் என்று தெரிகிறது[6]. அவர்கள், பெரும்பிடுகு, மாற்பிடுகு, விடேல் விடுகு, பகாப்பிடுகு முதலான பல்லவ அரசர்க்குரிய பட்டங்களை யுடையவர்களாகக் காணப்படுவதால், அம்மரபினர் பல்லவர்க்குத் திறைசெலுத்திக்கொண்டு அவர்கட்குக் கீழ்ச் சிற்றரசராயிருந்திருத்தல் வேண்டும் என்பது திண்ணம். பழந்தமிழ்க் குடியினரான முத்தரையரது வரையா வண்மை,

---

1. (1) விக்கிரம சோழனுலா, வரிகள் 25 முதல் 32 முடிய.
   (2) குலோத்துங்க சோழனுலா, வரிகள் 35—46
   (3) இராசராச சோழனுலா, வரிகள் 29—40
2. கலிங்கத்துப்பரணி, பாடல்கள், 197—200.
3. }
4. } Epigraphia Indica, Vol. XIII, pp. 142 and 144.
5. Inscription No. 202 of 1926.
6. Epi. Ind., Vol. XIII, pages 142 & 143.

'பெருமுத்தரையர் பெரிதுவந் தீயும் கருனைச்சோறு'[1] என்று பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றாகிய நாலடியாரில் பெரிதும் புகழப்பட்டுளது. அம் முத்தரையரே, கி. பி. எட்டாம் நூற்றாண்டில் தஞ்சைக்கும் திருச்சிராப்பள்ளிக்கும் இடைப்பட்ட ஒரு சிறு நாட்டைப் பல்லவர் ஆட்சிக்குட்பட்ட குறுநில மன்னராயிருந்து ஆண்டு வந்தனர் என்று செந்தலைக் கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றன[2]. அன்றியும், அவர்கள் பாண்டியரைப் போரிற் புறங்கண்ட செய்தியும் அச்செந்தலைக் கல்வெட்டுக்களால் புலனாகின்றது. ஆகவே, அவர்கள், பல்லவர்களோடு சேர்ந்து பாண்டியருடன் போர் நிகழ்த்தினர் என்பது தெள்ளிது[3]. அக்காலத்தில் பழையாறை நகரிலிருந்து அதனைச் சூழ்ந்த நிலப்பரப்பை ஆண்டு வந்தவர் சோழர் குடியினர் என்பதும், அன்னோர் தமக்குரிய சோழ மண்டலத்தைத் திரும்பப் பெற்றுத் தம் ஆட்சிக்குள்ளாக்குவதற்குக் காலங் கருதிக்கொண்டிருந்தனர் என்பதும் முன்னர் விளக்கப்பட்டன. எனவே, கி. பி. 846-ஆம் ஆண்டில் பழையாறை நகரிலிருந்த விசயாலய சோழன் என்பான் முத்தரையர் மரபினனாகிய ஒரு குறுநில மன்னனைத்தாக்கி அவன் ஆளுகைக்குட்பட்டிருந்த தஞ்சைமா நகரைக் கைப்பற்றிக் கொண்டனன் என்பது தேற்றம்[4]. முத்தரைய மன்னன்பால் திறை பெற்றுவந்த பேரரசனும், அவனை அந்நாளில் விசயாலயன் படையெழுச்சியினின்றும் காப்பாற்றாமல் கைவிட்டனன் போலும். பல்

1. நாலடியார், பா. 200.

2. Epi. Ind., Vol. XIII, No. 10; The Pallavas by G. Jouveau-Dubreuil, page 76.

3. Epi. Ind., Vol. XIII, p. 144 'பல்லவன் வெல்லத்தென்னன் முனைகெடச் சென்றமாறன்'.

4. The Colas, Vol. I, page 135.

தஞ்சை, வல்லம் முதலான நகரங்கள் முத்தரையர்க்குரியவாயிருந்தன என்று செந்தலைக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன. ஆதலால் அவர்களிடமிருந்துதான் விசயாலயன் தஞ்சையைக் கைப்பற்றியிருத்தல் வேண்டும்.

